குரு தோத்திரம்

அரி ஓம் நன்றாக குரு வாழ்க

குருவே துணை.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குரு உரு சிந்தித்தல் தானே.



கணபதி தோத்திரம்:

கணபதி என்றிட கலங்கும் வல்வினை
கணபதி என்றிட காலனும் கைதொழும்
கணபதி என்றிட கருமமும் விலகிடும்
கணபதி என்றிட கவலையும் நீங்குமே

ஓம் ஸ்ரீ மகா கணபதியே நமஹ:

முருகன் தோத்திரம்:

முருகனே செந்தில் முதல்வனே
மாயோன் மருகனே ஈசன்
மகனே ஒருகை முகன் தம்பியே
நின்னுடைய தண்டைகால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

ஓம் சரவணபவாய நமஹ.

## சரஸ்வதி தேவி துதி:

தாயே கலைவாணி ஏகவள்ளி நாயகியே

வான சரஸ்வதியே என் வாக்கில்

குடியிருந்து நாவில் குடியிருந்து

நல்லாசி தாரும் அம்மா

கமலாசனத்தில் காலடி பெற்றவளே

என் குரலில் குடியிருந்து கொஞ்சும் மதி

பெற்றவளே குறைகள் ஒன்றும்

வாராமல் உடனிருந்து காருமம்மா.

## நவ கிரகங்கள் தோத்திரம்:

ஓம் ஹ்ரீம் ஆதித்யாய

சோ மாய மங்களாய புதாய

குரு சுக்கிர சனிப் யச்ச

ராகுவே, கேதுவே நமஹ.



## நவகிரக திசைகளுக்குப் பாடல்கள்:

**1. சூரியன் திசை 6 வருடங்கள் நடைபெறும் பலன் (3,6,10,11ல் இருந்தால் நல்ல பலன்கள் உண்டு)**

பரிதியின் திசை ஆறாண்டும் பரதேசம்.

பிதுர்வுக்கு கண்டம் கரி, பரி, காளி

பீடை கண்கள் நோய் பயிர்

பொன் சேதம் திரிதலும் உண்டு

பெரிய கோல் வலிவரிந்து

பேசுவீர் தமிழ்வல்லாரே

**2. சந்திரன் மகாதிசை 10 வருடங்கள் நடைபெறும் பலன்கள் (1,3,6,7,10,11ல் இருந்தால் நல்ல பலன்)**

தாமது திசை பத்தாண்டும் தாயும்

மாதர்க்கு நன்மையுண்டாம் மாமணம்

பொன் மைந்தர் வாகனம் சிவிகை, பூமி

காம மாதுடனே கலியாண ஆபரணம், ஆடை,

சீமந்தமாகும் கோலின் திறமைந்து உரைப்பாய்

- மாதே.

3. செவ்வாய் மகாதிசை 7 வருடங்கள் நடைபெறும் பலன் (3,6,11ல் இருந்தால் நல்ல பலன்கள்)

பெண்ணே சேய்திசை ஏழாண்டும்

பெருகு தீ சுரம், விரோதம், மண் மனை

வழக்கு சோரம் வலிய சகோதரர்க்கு

பீடை, குன்னிய உதிர கட்டி, கொடியவர்களால்

தீங்கு நன்னுங் கோல் திறமறிந்து

நவிலுவாய் மாதே நீதான்.

4. இராகு மகாதிசை 18 வருடங்கள் நடைபெறும் பலன்கள் (3,6,11ல் இருந்தால் நல்ல பலன்கள்)

ஊர் கரும் பாம்பீரென்பான்

உயிர்சிறை, பந்து சேதம் சீர்கெடும்

பொருள் போம் பெண்ணால், தின மன கர்ம

வாதம் பாரண்ணை தந்தை மாமன் பாட்டனார்

இவர்களுக்கு கண்டம் கார் விசை

மதினால் பீடை கவிதறிந்து உரைப்பாய் மாதே.



5. குரு மகாதிசை 16 வருடங்கள் நடைபெறும் பலன்கள் (2,5,7,9,11ல் இருந்தால் நல்ல பலன்கள்)

காட்டும் பொன் திசை யீரெட்டும்

கனத்த வாகனம் கல்யாணம் பொன் பூமி

சூட்டமாய் ஆபரணம் ஆடை

சூழ்ந்திடும் பந்துநேசம் ஈட்டிய

பொருள் ஆரோக்கியம் இஸ்டமா

மனைவி புத்திரர் நாட்டிய தேவ பூசைநல

மெல்லாம் உண்டு கண்டாய் மாதே.

6. சனி மகாதிசை 19 வருடங்கள் நடைபெறும் பலன்கள் (3,6,11ல் இருந்தால் நல்ல பலன்கள்)

உண்டதோர் சனி பத்தொன்பான்

உயர்ந்த வீடுடன் நற்பொருள்

கொண்டிடும் அடியார் நேயம் பொன்னும்

குறைவிலா ஆயுள் விருத்தி உண்டாகும்

கண்டோர் பகை, கனத்த வாகனங்கள்

உண்டுபண்ணும் தாயே.

7. புதன் மகாதிசை 17 வருடங்கள் நடைபெறும் பலன்கள் (2,6,8,10,11ல் இருந்தால் நல்ல பலன்கள்)

புகர் புதன் திசை பதினேழும்

புரிந்தவர் வர்த்தகம் பொன் பூமி

மிடுமென அரசர் நேயம்

வீணையால் சபை பிரசங்கம்

சுக மிகு மாதர்கள் போகம் மாடிவீடு நேயம்

சுத்த வாகனம் உண்டென்று அறிகுவாயே.

8. கேது மகாதிசை 7 வருடங்கள் நடைபெறும் பலன்கள் (3,6,11ல் இருந்தால் நல்ல பலன்கள்)

சொல்லிய கேது திசை ஏழா

மாண்டும், தூண்டிய விலப் பரயோகம்

அல்லலும் மித்திர சோரம்

அரசரால் யாத்திரை பீடை

நல்லதாய் தாயாருக்கு கெண்டம்

நஷ்டமாம் கன்று காலி பல்லு

தாய் நல்லோர் கான பகிர்த்திட்டோம் நன்மைக்கே.



9. சுக்கிரன் மகாதிசை 20 வருடங்கள் நடைபெறும் பலன்கள் (1,2,3,4,5,6,9,11,12ல் இருந்தால் நல்ல பலன்கள்)

நன்மை சேர் திசை வெள்ளிக்கு

நயன்றதோர் இருபதாண்டும் பொன்,

பொருள், பூமி, மனை யோகம், சிவிகை

வாகனம், பல்லாக்கு, காம மாதுடனே

போகம், கலியாண ஆபரணம், சீமந்தம்

ஆகும் கோளின் திறமறிந்து கூறும் மாதே.

---

பாபக் கிரகங்கள் 1-4-7-10க்கு

உடையவர்களாயின் பாபத் தன்மை நீங்கி சுப பலன்களையும், சூரியனுக்கு இரு புறங்களிலும் பாவிகள் இருந்தாலும் பார்த்தாலும் குழந்தை கர்ப்பத்திலிருக்கும் போதே பிதாவுக்கு மரணம் ஏற்படும் என்பதாம்.

## (9) நவ கிரகங்கள் செய்யும் வேலை

1. தொழில் ஸ்தானம். 10ம் இடத்தில் இருப்பவர், பார்த்தவர், பத்தாமிடத்து அதிபதி இவர்களில் எந்த கிரகம் உச்சம், ஆட்சி, நட்பு பெற்றுள்ளதோ அதே கிரகத்தின் தொழில் அமையும் என்பதை அறிய வேண்டியது.

10-ஆம் இடத்தில் சூரியன் ஆட்சி, உச்சம், நட்பு பெற்றிடில் ராஜாங்கத் தொழில், அரசன், ராஜசபை தொழில், மானேஜர் என்னும் நிர்வாக அதிகாரிகள், பொதுஜனங்களில் அல்லது பொது ராஜாங்க கவர்ச்சியான உத்தியோகம், நியாயாதிபதி, மெஜிஸ்ட்ரேட், போலீஸ் அதிகாரி, தங்க நாணயச்சாலை அதிபதிகள், தீர்வை அதிகாரிகள், வக்கீல்கள் முதலிய உத்தியோகம் உண்டு.

**2. சந்திரனால் உண்டாகும் ஜீவனங்கள்:**

மாலுமி, கப்பலோட்டி முதலிய ஜல சம்பந்தமான தொழில், விளம்பரம் செய்தல், போஜன சாமக்கிரியை அமைத்தல், பிரசவ மருத்துவம், ஜலரூபமான அல்லது திரவ பதார்த்த வகைகளில் வியாபாரம்.

சந்திரன் மீனம், கடகம், விருட்சிகம் இவைகளில் இருக்கும்போது கப்பல் அல்லது கப்பற்படைக்குரிய உத்தியோம் முதலியன உண்டாகும் என்பதாகும்.



**3. செவ்வாய் கிரகத்தினால் உண்டாகும் தொழில்கள்:**

போர், வீரத் தொழல், இரும்பு எ.்.கு தொழில், ரன வைத்திய சிகிச்சைத் தொழில், ரசாயன சாஸ்த்திர தொழில், மருந்து விற்பனைத் தொழில், வைத்தியம், உலோகம், கூரான ஆயுதங்கள், நெருப்பு இவைகளை உபயோகிக்கும் தொழில், மெக்கானிக்குகள், கசாப்புக்கார தொழில், விவசாயம் முதலியன பூமி சம்பந்தமாக தொழில், வர்த்தகமான செய்தி. செவ்வாய், மீனம், கடகத்திலிருக்கும்போது கடற்படை தொழில், அமீனா, சாய வேலை, கடிகார வேலை, தோல் பதனிடும் வேலை, தச்சுவேலை, முதலியன செவ்வாய்க் கிரகத்திற்கு அமையும் தொழில்கள் என்பதாம்.

**4. புதன் கிரகத்தினால் உண்டாகும் தொழில்கள்:**

ஊபாத்தியாயர், போதகன், கணக்கன், நூலாசிரியன், குமாஸ்தா, புத்தக வியாபாரி, பிரசுரிக்கர்த்தா, எடிட்டர், சுக துக்கம் சேதி சொல்லும் தொழில், போஸ்ட் ஆபீஸ் வேலை, காரியதரிசி, மொழிபெயர்ப்போன், சாஸ்திர தெய்வீக சம்பந்தமான தொழில், வர்த்தகமான செய்தி சம்பந்தமான தொழில், கணித சாஸ்திரி (மாத்த மெடிசன்) லாயர்கள், அச்சடிப்பவர்கள், நூதன பிரசங்கி, கமிஷனர் என்ற விசாரணாதிகாரி, வேலையாள், ஜோதிடர் முதலிய தொழில்கள் என்பதாம்.

**5. குரு கிரகத்தினால் உண்டாகும் தொழில்கள்:**

வக்கீல்கள், நியாயாதிபதி, புரோகிதர், அர்ச்சகர், டாக்டர், மந்திராலோசனை சபையினன் (கவுன்சிலர்), வட்டி வியாபாரி, பலசரக்கு, ஜவுளி வியாபாரம், அதிக நம்பிக்கையான உத்தியோகஸ்தர், தத்துவஞானம், வேதாந்தம், சித்தாந்தம் இவைகள் சம்பந்தமானவை. மத சம்பந்த பிரசங்கி முதலிய தொழில்கள் உண்டு என்பதாம்.

**6. சுக்கிரன் கிரகத்தினால் உண்டாகும் தொழில்கள்:**

புஸ்பம், பரிமள வாசனைத் திரவியம், பெண்களுக்குரிய வஸ்திர ஆடை அலங்காரமான சாமான்கள், ஆபரணங்கள், மிட்டாய், ரொட்டி முதலிய வியாபாரங்கள், சரிகை வேலை, சித்திர வேலை, வர்ணவேலை, சங்கீத தொழில், டாக்டர், பாடகர், பட்டுநூல், பட்டு துணி ஜவுளிவியாபாரம், சணல் துணி, நாடா வியாபாரம், பிடில் வாசிக்கும் தொழில், நவரத்தின வியாபாரம், கூத்தாடி தொழில் முதலியன சுக்கிரனுக்கு உண்டாகும் தொழில்களாகும்.

**9. சனி கிரகத்தினால் உண்டாகும் தொழில்கள்:**

சிற்பத் தொழில், நிலக்கரி வியாபாரம், நிலங்கள் சொத்துக்கள் வாங்கி விற்கும் தொழில்கள், ஈய்ய வேலை, உழைப்பாளித் தொழில் வேலை, புராதன சரித்திர சோதனை வேலை, கட்டிடம் கட்டும் தொழில், விவசாய வேலை, குயவன், தோட்டி, பெருக்குதல், சுரங்கம், தோல் பதனிடுதல், இடையர், பப்பூன் முதலிய தாழ்ந்த ஜீவனங்கள் உண்டு என்பதாகும்.



**8. ராகு கிரகத்தினால் உண்டாகும் தொழில்கள்:**

பஞ்சு, காடு, மலை சுற்றுதல், கண்ணாடித் தொழில், விஷ வைத்தியம், பின்னல் வேலை, விலங்கிடுமிடத்தில் வேலை, ரேடியோ, கடிகார வேலை, ஈனத்தொழில், கருங்கல், கோமேதகம், சந்தனம் சம்பந்தமான தொழில், டாக்டர் தொழில், தந்தி டெலிபோன் தொழில், மூங்கில் தொழில் முதலியன உண்டாகும் தொழில் என்பதாம்.

**9. கேது கிரகத்தினால் உண்டாகும் தொழில்கள்**

கொலை செய்தல், மந்திரம் ஜெபித்தல், கொள்ளு, வைடூரியம் துருக்கல், கத்தி இவைகள் வியாபாரம் ஆகும்.

## மனைவி கிடைக்கும் திசை அறியும் வழி

7-மிடத்ததிபதி

1. சூரியனாகில் கிழக்கு திசை
2. சந்திரனாகில் வடக்கு திசை
3. செவ்வாயாகில் தெற்கு திசை
4. புதனாகில் வடக்கு திசை
5. குருவாகில் வடகிழக்கு திசை
6. சனியாகில் மேற்கு திசை
7. சுக்கிரனாகில் கிழக்கு திசை
8. ராகுவாகில் தென்மேற்கு திசை
9. கேதுவாகில் தெற்கு திசை - யில் அமையும்.

ஆண்-பெண் இருபாலருக்கும் பொருந்தும்.



ஜாதகருக்கு 7ஆம் இடத்தில் இருக்கும் கிரகங்களில் ஆட்சி, உச்சம், நட்பு பெற்ற கிரகத்திற்கு அமையும் மனைவியும் அதன் குணங்களும் பின்வருமாறு அமையும்:

(1) 7-ல் சூரியன் இருந்தால் ஸ்திரி துவேசி. இரண்டு மனைவி உடையவன். தேசாந்திரம் போவான். மனைவியை துவேசிப்பவன். துன்மார்க்கன், கோபி. ஆனால் 7-மிடத்தை சுபகிரகம் பார்த்தால் சுகமே உண்டாகும்.

(2) 7-ல் சந்திரனிருந்தால் வக்கிர எண்ணன். ஸ்திரி லோலன். ஸ்திரி பீடை, ராஜப்பிரதாபி, லாபமுண்டு. ஸ்திரி வசியமாக்குபவன். போகவான், சதா திரிந்து கொண்டிருப்பான் என்பதாகும்.

(3) 7-ல் செவ்வாய்கிரகம் இருப்பின் தன் மனைவிக்கு பீடை உண்டு. யுத்தப்பிரியன். அதிக காமமுடையவன். களஸ்திர நாசமுண்டு. இல்லாவிட்டால் திருட்டுதனமாக வேறு ஒரு ஸ்திரியின் லாபமுண்டாம். துஷ்ட ஸ்திரிகளின் சேர்க்கை உண்டாம்.

(4) 7-ல் புதனிருந்தால் தாயாருக்கு சௌக்கியம் உண்டு. ஜாதகனுக்கு குதிரை போன்ற (பைக்) வாகனமுண்டு. ராஜபூஜிதன், தர்மன், பிரசித்தமான கீர்த்தியுடையவன். அங்கவீனன். சில்பகலா விநோதன் முதலியவைகள் உண்டாம்.

(5) 7-ல் குரு இருந்தால் வித்தைக்கும், தனத்திற்கும் ஈசன். வெகு லாபமுடையவன். பதிவிரதனாயும் பத்தி உடைய மனைவி அமையும். தீரவான், பிதுரு, குரு துவேஷி உடையவன் என்பதாம்.

(6) 7-ல் சுக்கிரன் இருந்தால் அதிக காமமுடையவன். பணக்காரன். அயல் மனைவியை விரும்புவன். வாகனம் உண்டு. நல்ல களஸ்திரமுடையவன்.

(7) 7-ல் சனி இருந்தால் இரண்டு தாரம் உடையவன். முதல் தாரம் நாசமுண்டு. வேசி சம்போகவான். மேலிந்த களஸ்திரம் உண்டு. பாரமான சுமையை தூக்கி அனுபவிப்பான் (குரு பார்த்தால் குற்றம் நீங்கும்).

(8) 7-ல் ராகு இருந்தால் இரண்டு தாரம் உடையவன். முதல் தாரம் நாசமுண்டு. இரண்டாம் தாரத்திற்கு குண்ம வியாதி உண்டு. கர்வி. சாமாத்தியமான சோர புருஷன் என்று அறியலாம்.

(9) 7-ல் கேது இருந்தால் இரண்டு தாரம் உடையவன். முதல் தாரம் நாசமுண்டு. கெட்ட மனைவி உண்டு. சதா திரிந்து கொண்டிருப்பான் என கூறுக.

இந்த 7-மிடத்ததிபதி சுபக் கிரகத்தோடிருந்தாலும் 7-மிடத்தை சுபர் பார்த்தாலும் மேற்படி குற்றம் நீங்கும் என அறியவும்.

7ஆம் இடத்ததிபதி கிரகம் அந்த 7ஆம் இடத்தில் இருக்கும் கிரகத்தின் ஜாதி என்னவோ அதன் குணாதியங்கள் கொண்ட மனைவி அமைவாள் என்பதாம்.



## கிரகங்களின் ஜாதி

| | |
|---|---|
| சூரியன், செவ்வாய் | - சத்திரிய ஜாதி உடையவன் |
| குரு, சுக்கிரன் | - பிராமண ஜாதி உடையவன் |
| சந்திரன், புதன் | - வைசிய ஜாதி உடையவன் |
| சனி | - சூத்திர ஜாதி உடையவன் |
| ராகு, கேது | - சங்கிரம ஜாதி உடையவன் |

## கிரகங்கள் பலன் தரும் காலங்கள்

1. சூரியன், செவ்வாய் கிரகங்கள் ஆரம்ப காலத்திலேயே பலன்கள் கொடுப்பார்கள்.
2. சந்திரன், புதன் கிரகங்கள் அவர்கள் காலம் முழுவதும் பலன்கள் கொடுப்பார்கள்.
3. குருவும், சுக்கிரனும் அவர்களுடைய காலத்தின் மத்தியில் பலன்களை கொடுப்பார்கள்.
4. சனி, ராகு, கேது அவர்களின் காலத்தின் பிற்பகுதியில் பலன் கொடுப்பார்கள்.

## மிகச்சிறந்த நட்சத்திரங்கள்

விவாகப் பொருத்தங்களைப் பார்க்காமலே மிருகசீரிஷம், மகம், சுவாதி, அனுஷம் இந்த நான்கும் பெண் (அ) ஆண் நட்சத்திரமாக இருந்தால் விவாகம் செய்யலாம்.

## சுகமாக வாழ்வார்கள்

முக்கியமான பொருத்தங்கள் 10-ல் நமக்கு தேவையானது 5 பொருத்தங்கள் மட்டுமே. அவை பின்வருமாறு கூறுக:

1) தின பொருத்தம்
2) கனப் பொருத்தம்
3) யோனிப் பொருத்தம்
4) ரச்சுப் பொருத்தம்
5) ராசிப் பொருத்தம்

முதலியன இருந்தால் விவாகம் செய்யலாம்.

மண்ணவன் பிறந்த நாளும் மங்கையர் பூப்பெய்த நாளும் சோதிடத்திற்கு சிறந்த நாள் பெண்கள் ருது நட்சத்திரமும், ஆண் பிறந்த நட்சத்திரமும் பொருந்தும் என்பதாம்.



## கிழமை ஆருடம் பார்க்கும் விதம்

வாரத்தின் ஏழு நாட்களின் பலன்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அதில் ஜோதிட குறி கேட்பவர்களை உங்கள் மனதில் கேட்கும் காரியங்களை குறித்துக்கொண்டு அந்த காரியம் நடக்குமா? இல்லை தோல்வியா என கேட்டால் வாரத்தின் ஏழு நாட்களில் ஒரு கிழமையை சொல்லச் சொல்லி அந்த கிழமைக்கு உரிய பலன்களை கேட்பவர்களுக்கு படித்து கூற வேண்டும் ஜோதிடர்கள்.

## திங்கட்கிழமை பலன்கள்

திங்களுக்கு பங்கப்பட்டு அரசு ஆளும். பாங்காடு பயிர் செழிக்கும். ஆளுக்காரன் பண்ணைக்காரன் ஆக வேண்டும். வனம் போன பாண்டியன் கனகுதாண்டி ஏறி வருவான் என்று கூறி நீ நினைத்த காரியம் கைகூடும் என்று சொல்ல வேண்டும்.

## செவ்வாய்க்கிழமைக்கு பலன்கள்

செவ்வாய்க்கு செந்தென திருந்தி வாழ்வான். தினமும் வருடியாழ்வாள். மண்ணவனும் மகிழ்ச்சியாவான். மதில் ஏறி பிச்சை போடுவாள். நீச்சன் வீடு என்று கூறி செவ்வாய்க்கிழமை சொன்னதினாலே காரியம் தடைபட்டு மெதுவாக நடைபெறும். ஆனால் பங்கம், பழி வந்து நீங்கும் என கூறுக.

## புதன் கிழமைக்கு பலன்கள்

புதனுக்கு செந்நாய், புலி என்று கூறவேண்டும். சதா விதவை வீடு சாதாலுக்கும் புறாவுக்கும் எறிந்த கல்லைப்போல் ஆகும். சதா முண்டச்சிவீடு, கருப்பு தேவகி, ஈறங்கி என்று சொல்லவும், அதாவது புதன்கிழமை சொன்னவர்களுக்கு நீங்கள் கேட்ட காரியம் தாமதமாக இருக்கும். விதவை வீடு ஈறங்கி கருப்பு தெய்வத்தின் குறை உண்டு என கூறுக.

## வியாழக்கிழமைக்கு பலன்கள்

கள்ள வியாழன் காலடி சூது அதிலே ஒரு பெண்ணுக்கு உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை எரிச்சல், வாதாட்டம், சூதாட்டமாக உள்ளது எனக் கூறி நீ கேட்ட காரியம் மொடை என கூறி வியாதியினால் அவதிப்படுவாங்க காரியம் நடைபெறாது எனக் கூறவேண்டும்.

## வெள்ளிக்கிழமைக்கு பலன்கள்

வெள்ளிக்கி கொல்லிங்கை கூடவே வரும்.

பெருச்சாளி வாகனம் அறுவடை செய்வதுபோல உன் கட்டு சாதத்தில் பெருச்சாளி புகுந்துகொண்டதுபோல் உன் காரியம் இருக்கிறது இப்போது என கூறுக.



## சனிக்கிழமைக்கு பலன்கள்

சனிக்கிழமைக்கு சஞ்சலம், போராட்டம், கலகக்காரன், வீடு, சத்தியவாக்கு, எசகு பிசகு எதிரிகள் சூழ்ச்சி தன் சொத்தை தின்றுவிட்டு தனக்கே எதிரியாக இருப்பார்கள். கோர்ட் வேஜ்ஜியங்கள் சிறை தண்டனை போன்ற கஷ்ட நஷ்டங்களைத் தரும் கிழமையாக கூறியுள்ளீர்கள். இது கெடுதலான பலன்கள் எனக் கூறுக.

## ஞாயிற்றுக்கிழமைக்கு பலன்கள்

அருக்கனுக்கு நெடுக்கும். அதிலே ஒரு பெண் பால் இருக்க நலமாகுது. பெருக்க உயிரை பிடிக்கிறது. பேடியான செல்வத்தை குறைக்கிறது. கருதிய பொருள் கைகூடி வருகிறது என்று கூறி நீ சொன்ன கிழமைக்கு ஒரு பெண்ணால் காரியம் நடைபெறும் எவ்வளவு கஷ்டங்கள் வந்தாலும் அந்த காரியம் நடைபெறும் என்று கூறவேண்டும்.

## 12 ராசிகளுக்கும் ஆருடம் பார்க்கும் முறை

12 எண்களில் ஏதாவது ஒன்றை சோதிடம் கேட்க வந்தவரை சொல்லச்சொல்லி பலன்கள் கீழே எழுதப்பட்டுள்ள பிரகாரம் வாசித்து கூறுவாயாக.

சுபம் சுபம் சுபம்

### 1. மேஷ ராசிக்குப் பலன்கள்

மேஷ ராசிக்கு மிருகம் வெள்ளாடு. மேஷ ராசியில் நம் வீட்டில் அல்லது வெளியில் இருந்துபோன பொருள் அல்லது ஜீவன் வந்து சேருவார்கள். குடும்பம் ஒற்றுமையாக இருக்கும். கஷ்டங்கள் எவ்வளவு வந்தாலும் கொஞ்சம் கொஞ்சமாக விலகி நல்ல சுகம் ஏற்படும் என்பதாம்.

### 2. ரிஷப ராசிக்குப் பலன்கள்

ரிஷப ராசிக்கு பல விதத்திலும் லாபம் வரும். ரிஷபம் எருது வாகனம். அது ஈஸ்வரனுக்கு காவல் காரகனாக உள்ளது. ஆகவே தன் பூர்வ புண்ணிய ஸ்தலத்தை விட்டு அந்நிய நாடு வாய்க்கும். மலைபோல் வந்த கஷ்டங்கள் பனிபோல நீங்கம். புத்திர சம்பத்து உண்டாம். பகைவர்களை ஜெயிப்பீர்கள். அவர்கள் உங்களுக்கு வசியமாவார்கள். நினைத்த காரியம் நடக்கும் என்பதாம்.



### 3. மிதுன ராசிக்குப் பலன்கள்

மிதுன ராசிக்கு மிதந்து கொண்டிருக்கும் அதாவது வெயிலில் காயாமலும் மழையில் நனையாமலும் மிதந்து கொண்டிருக்கும் ராசி இது. எந்த காரியம் எடுத்தாலும் சண்டை, நம்பிக்கையில்லாத காரியங்கள், கஷ்ட, நஷ்டங்கள் இது பலனாக நடக்கும். ஆகவே ஒரு மாதம் வரை தள்ளிப்போட வேண்டும்.

### 4. கடக ராசிக்குப் பலன்கள்

கடக ராசிக்கு நண்டு கொழுத்தால் வங்கில் தங்காது என்பது போல ஆகாத காரியங்களில் ஈடுபடுதல் அதனால் வம்பு வழக்கு கோர்ட்டு என துஷ்ட பலன்கள் வந்து கூடும். ஒரு பெண்ணால் பங்கம் வந்து நீங்கும். குல தெய்வங்களுக்கு வெள்ளிக்கிழமை பூஜை செய்வது நல்ல பலன்கள் நடைபெறும் எனக் கூறவும்.

### 5. சிம்ம ராசிக்குப் பலன்கள்

சிம்ம ராசிக்கு அதிபதி சூரியன் வருவதால் அவரே ராஜா, அவரே மந்திரியாக ஆளுவார்கள். எந்த இடத்தில் அமர்ந்தாலும் அந்த இடம் தனது தான் எனக்கூறும் அமைப்பு சிம்மத்திற்கு உண்டு. சிம்ம ராசிக்கும் கடக ராசிக்கும் அதிகார தோர்ணம் உண்டு. ஆகவே கொஞ்சம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்க.

**6. கன்னி ராசிக்குப் பலன்கள்**

கன்னி என்றால் இளமை வாய்ந்த பெண்மணியாகும். தெளிந்த நீரோடை போல பரிசுத்தமான பெண்மணி. காரியம் வெற்றி ராஜ தரிசனம். வீடு, காடு, வண்டி, வாகனம் வந்து சேரும். பெண்ணினாலே பெருமை உண்டு. குலதெய்வம் பாதுகாக்கும். உனது குல தெய்வத்திற்கு அமாவாசை அன்று நெய்விளக்கு போட்டு 12 மாங்கலிய பெண்மணிகளுக்கு அன்னதானம், மஞ்சள், தாலிக்கயிறு, சொர்ண தானம் செய்வித்தால் தடை பெற்ற திருமணம் கைகூடும். காதல் ஜோடி கை கூடும். இது நல்ல ராசி எனக் கூறுக.

**7. துலாம் ராசிக்குப் பலன்கள்**

துலாம் ராசிக்கு அதிபதி சுக்கிரன் கிரகமாவதால் பெண்ணால் மண், மனை, அலங்காரம் வந்து சேரும். வாகன தொழில் பலிக்கும். சொந்த பந்தங்கள் கூடி வருவார்கள். சொந்தமாக கனத்த வாகனம் வாங்குவீர்கள். கிழக்கு திசையில் இருந்து வருமானம் வரும். நினைத்த காரியம் கை கூடும் என கூறுவாயாக.

**8. விருட்சிக ராசிக்குப் பலன்கள்**

விருட்சிக ராசிக்கு விசனமும், கவலையும் தீராது என சொல்லலாம். நம்பிக்கை மோசம் வரும். கை விட்டு போன பொருள் வராது. விஷத்தினால் பயம். மருந்து, மாயம் போன்றவற்றால் தீங்கு உண்டாகும். அந்த ஸ்தலத்தை விட்டு வேறு வீடு மாற்ற வேண்டும் என சொல்ல வேண்டும்.



**9. தனுசு ராசிக்குப் பலன்கள்**

தனுசு ராசிக்கு கர்மா என சொல்லலாம். எந்த காரிய கேடு வந்தாலும் பொருத்து நிதானித்து தீர்ப்பு கூறும் ராசி. குருகடாஷம் பெற்ற ராசியாக இருப்பதால் எல்லா காரியமும் கைகூடும் எனக் கூற வேண்டும்.

**10. மகர ராசிக்குப் பலன்கள்**

மகர ராசிக்கு பல தரப்பட்ட வாழ்க்கை அமையும். மேலே செல்வார்கள். மறுபடியும் சரியில்லை என கீழே இறங்கிவிடுவார்கள். வறுமையும், கஷ்டமும் வந்து வாட்டும். மகர ராசிக்கு சனிகிரகம் அதிபதியாக இருப்பதால் அவருக்கு அர்ச்சனை செய்து நேர்மையாக இருந்தால் மேற்படி கஷ்டங்கள் நீங்கும்.

**11. கும்ப ராசிக்குப் பலன்கள்**

கும்ப ராசிக்கு ஆனந்தமாக வாழ்வான் பார். குடும்பத்தில் உள்ளவர்களின் கஷ்டம், கலகம், நோய் நீங்கும். புத்திர சம்பத்துண்டாம். வெளியூர் செல்ல லாபம் வரும். நீதி தவறாமல் வாழ்வான். ஆனால் ஆறு மாதம் சுகம், ஆறு மாதம் கஷ்ட ஜீவனம் உண்டு என சொல்ல வேண்டும்.

**12. மீன ராசிக்குப் பலன்**

மீன ராசிக்கு எதிலும் முன்னேற்றமும் செல்வச் செழிப்பும், பூமி வாங்குதலும், கிணறு போர் போன்ற ஜல சம்பந்தமான யோகமும் உண்டு. அரசாங்க ஆதரவும், காரிய ஜெயமும் அனுகூலமாகும் என்றாகும்.

## அஷ்டதிக்கு ஆருடம்

**1. வடக்கு திசை**

வடக்கு திசையில் அமர்ந்துள்ளவர்களுக்கு குபேர சம்பத்து தொழில் வளம் மேன்மை, உத்தியோகம் கிடைத்தல், ராஜ தரிசனம், வீடு கட்டுதல், விவாகம் செய்தல், பிரயாணம் கைகூடுதல், அதிகாரிகள் உதவி கிட்டுதல், கங்கை, பூமி, தடாகம் பல்லக்கு போன்ற எதிர்பாராத யோகங்கள், குபேர திசையில் அதாவது வடக்கு திசையில் உட்கார்ந்து ஆருடம் கேட்பவர்களுக்கு கூறுக.

**2. தெற்கு திசை**

தெற்கு திசையில் அமர்ந்துள்ளவர்களுக்கு யமன் வீடு வருவதால் அரசாங்கத்தினால் சிறை தண்டனை வருதல், வாகன நஷ்டம், கன்று, காளை, பிணி, பீடை, வெள்ளாமை, விளைச்சல் நஷ்டம், குடும்பத்தில் சண்டை, பேய், பிசாசு பிடித்து ஆட்டுதல் முதலிய துர்பலன்கள் நடைபெறும் எனக்கூறுக.

**3. கிழக்கு திசை**

கிழக்கு திசையில் இருந்து ஆருடம் கேட்பவர்களுக்கு குல தெய்வ வழிபாடுகள், கோயில் கட்டுதல், புத்திர சந்தான பிரார்த்தனை செய்து குழந்தை பாக்கியம் பெறுதல், சொத்து



கிரயம் செய்தல், கல்யாணம் செய்தல், வண்டி வாகனம் புதுப்பித்தல், குழந்தைகளுக்கு தேவையான பொருட்கள் வாங்கித் தருதல், விருந்தினர்களுக்கு விருந்தளித்தல் முதலிய நற்பலன்கள் தரும் திசை. கெட்டவன் கிழக்கு போய் வாழ் என கூறுவதும் உண்டு.

**4. மேற்கு திசை**

மேற்கு திசையில் இருந்து ஆருடம் கேட்பவர்களுக்கு திடீர் கெண்டம், கோர்ட்டு வேஜியம், பூமி, காணி இழத்தல், கைப்பொருள் இழத்தல், மானபங்கம், பெண்ணால் பகை. வழக்கு, வம்பு, தன் மேல் பொய் குற்றம் கூறுதல், ஞாபக மறதி, திருட்டுபோதல் போன்ற துர்பலன் வரும் என கூறுக. இவைகளை தவிர்க்க சனி பகவானை அர்ச்சனை செய்து நல்லெண்ணை விளக்கு போடவும். ஜெயம் ஏற்படும் என்பதாம்.

**5. வடமேற்கு திசை**

வடமேற்கு தீயினால் ஆபத்துண்டாம். அல்லது சூறை காற்றால் நஷ்டம் ஏற்படும்.

**6. வடகிழக்கு திசை**

வட கிழக்கு தெய்வ அனுகூலங்கள் உண்டு. பெரியவர்கள் ஆதரவு, ஆசி உண்டு. திடீர் யோகம் வந்து சேரும்.

## 7. தென்மேற்கு திசை

தென்மேற்கு திசையாகில் பிரபலங்கள், மன்னனின் ஆதரவு, தெய்வ அருள் முதலியன உண்டு.

## 8. தென்கிழக்கு திசை

தென்கிழக்கு அக்னியால் வாதை. கஷ்டங்கள், எதிலும் மனவருத்தம், காரிய கேடு, உற்றார், பெற்றார், உறவின் முறையால் கெடுதல். தீராத வியாதி போன்ற துஷ்ட பலன்கள் நடைபெறும் என்பதாம்.

சுபம். சுபம் சுபம்.